8th August 1960]

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : நாகப்பட்டினம், தூத்துக்குடி. கன்னியாகுமரி முதலிய இடங்களில் ஆரம்பிக்க உத்தேசம். அதற்கு 6,400 பவுன் செலவில் மெஷினரிகள் வரவழைக்கப்பட்டிருக்கின்றன.

SRI A. GOVINDASAMY : இந்தத் தொழிற்சாலை நிறுவுவதற்கு மத்திய சர்க்கார் ஏதாவது நிதி தர ஒத்துக் கொண்டிருக்கிறார்களா ?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : தகவல் இல்லை.

*Andhra river waters for Madras*

MR. SPEAKER : Questions Nos. 25 and 26 will be taken up together.

* 25 *Q.*— SRI S. M. ANNAMALAI : கனம் பொது மராமத்து அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா ?

(அ) 1960-ம் ஆண்டு ஏப்ரல் மாதம் 6-ம் தேதியன்று 134-ம் எண் கேள்விக்கு அளித்த பதிலையொட்டி கிருஷ்ணா, கோதாவரி, பெண்ணாறு ஆகிய ஆறுகளின் உபரித் தண்ணீரை நம் மாநிலத்திற்குக் கொண்டுவருவதைக் குறித்து ஆந்திர சர்க்காருடன் விவாதிக்கப்பட்டதா ?

(ஆ) அப்படியாயின், அதன் விவரம் என்ன ?

THE HON. SRI P. KAKKAN : (*a*) No, Sir.

(*b*) Does not arise.

* 26 *Q.*—SRI N. K. PALANISAMI, and SRI P. G. MANICKAM : Will the Hon. the Minister for Works be pleased to state—

(*a*) whether there has been any contract recently with the Andhra State regarding bringing of Andhra river waters to Madras; and

(*b*) if so, the details of the same?

THE HON. SRI P. KAKKAN : (*a*) No, Sir.

(*b*) Does not arise.

SRI M. KALYANASUNDARAM : கோதாவரி, கிருஷ்ணா ஆகிய நதிகளில் இருக்கக்கூடிய உபரி ஜலத்தை சென்னை ராஜ்யத்திற்குக் கொண்டுவரக்கூடிய திட்டம் ஏதாவது நமது அரசாங்கத்தின் பரிசீலனையில் இருந்து வருகிறதா ? அப்படியானால் அந்தத் திட்டத்தின் விவரம் என்ன ?

THE HON. SRI P. KAKKAN ஏற்கெனவே கிருஷ்ணா, பெண்ணாறு திட்டம் இந்த சர்க்காரால் பரிசீலிக்கப்பட்டிருக்கிறது. மொழி வழி மாகாணம் வந்தபிறகு மேலும் கோதாவரி, கிருஷ்ணா

[8th August 1960

தண்ணீரைக் கொண்டுவருவதற்கு ஸோனல் கௌன்ஸலில் இந்த அரசாங்கம் கலந்து பேசியிருக்கிறார்கள். பின்னால் இரண்டு மாகாண அரசாங்கங்களும் கலந்து பேசி பரஸ்பரம் நல்லதொரு முடிவிற்கு வருவோம், நல்ல முடிவு பெறுவோம் என்ற நம்பிக்கை இந்த அரசாங்கத்திற்கு இருக்கிறது.

SRI S. NAGARAJA MONIGAR : ஸார், தமிழ், தமிழர்கள், தமிழ் ராஜ்யம் என்று ஏற்கனவே இன வெறி பேசிக் கொண்டிருக்கும் ஒரு சாராருக்கு ஆந்திர நாட்டு ஜலம் உடம்பிற்கு ஒத்துக் கொள்ளுமா? அது அவர்களை ஆந்திரர்களாக மாற்றிவிடாதா?

MR. SPEAKER : I do not think the question requires an answer.

SRI A. GOVINDASAMY : திரு. சஞ்சீவி ரெட்டியார் அவர்கள் முதன் மந்திரியாக இருந்தபோது கிருஷ்ணா, கோதாவரி தண்ணீரை சென்னைக்கு வழங்குவதில் ஆட்சேபணையில்லை என்று உறுதி அளித்திருப்பதால் அதை அடிப்படையாக வைத்து நமது அரசாங்கம் அவர்களோடு பேச்சு வார்த்தை நடத்த தயங்கக் காரணம் என்ன?

THE HON. SRI P. KAKKAN : தயங்குவது இல்லை. திரு. சஞ்சீவி ரெட்டியார் அவர்கள் முதன் மந்திரியாக இருக்கும்போது அதுபற்றி ஸோனல் கௌன்ஸிலில் பேசப்பட்டிருக்கிறது. அவர்களே, சீப் என்ஜினியரை, பரிசீலனை செய்து ஸோனல் கௌன்சிலில் ரிப்போர்ட் கொடுக்கவேண்டுமென்று சொல்லியிருக்கிறார்.

SRI N. K. PALANISAMI : எலெக்ட்ரிஸிட்டி அமைச்சர் அவர்கள், இந்த ஆறுகள் விஷயமாக ஒரு அபிப்பிராயம் தெரிவித்திருந்தார். அதன் பிரகாரம், "இன்டர் ஸ்டேட் ரிவர்ஸை" மத்திய அரசாங்கம் எடுத்துக் கொள்வது என்று. இந்தக் கொள்கை மத்திய அரசாங்கத்தினிடம் வற்புறுத்தப் பட்டதா? அப்படியானால் அதன் விவரம் என்ன?

MR. SPEAKER : Let the hon. Member put a separate question to the Hon. Minister for Electricity.

SRI P. G. MANICKAM : கோதாவரி, கிருஷ்ணா, பெண்ணாறு நதிகளிலிருந்து உபரித் தண்ணீர் நமது ராஜ்யத்திற்கு கிடைக்கக் கூடுமா? கிடைத்தால் எவ்வளவு தண்ணீர் கிடைக்கக்கூடும் என்ற ஆராய்ச்சியாவது சென்னை சர்க்காரால் நடத்தப் பட்டதா?

THE HON. SRI P. KAKKAN : இரண்டு சர்க்கார்களும் ஸோனல் கௌன்ஸிலில் கலந்து பேசி நல்லதொரு முடிவிற்கு வர, நல்லதொரு முடிவு எடுக்க திட்டமிருக்கிறது. தண்ணீர் கிடைக்குமென்ற நம்பிக்கையிருக்கிறது.